[9th November 1961

SRI K. VINAYAKAM : முருகன் பெருமையை எடுத்துக் காட்டுகிற ஆறுபடை வீடுகளில் ஒன்றாகிய பழமுதிர்சோலைதான் இப்போதுள்ள அழகர் மலை என்பது உண்மையா? அது வைஷ்ணவர் கையில் சிக்கி, அதன் மூலம் சைவம் அழிக்கப்பட்டு விட்டதும் வாஸ்தவம்தானா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த மூலக் கேள்வியை கேட்டிருக்கும் அங்கத்தினர் அவர்கள் தீவிர வைஷ்ணவராவார், இந்த உப கேள்வியைக் கேட்கும் அங்கத்தினர் அவர்கள் முருகன் பக்தர் ஆவார். சர்க்காரைப் பொறுத்த வரையில் சைவமும், வைஷ்ணவமும் ஒன்றுதான். இங்கேயே பெருமாள் கோவிலில், விநாயகரும் இருக்கிறது, பைரவரும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது.

*Sugar Mills, Pennadam*

* 1934 *Q.*—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் விருத்தாசலம் வட்டம் பெண்ணாடத்தில் சர்க்கரை மில் ஏற்படுத்த இருந்தது எந்த நிலையில் உள்ளது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Soundararajan and Company, Madras, obtained a licence in October 1960 from the Government of India for the establishment of a sugar factory at Pennadam under the name and style of Aruna Sugar Limited, with a cane crushing of 1,250 tons per day. Share capital collection and purchase of machinery are in progress.

SRI A. GOVINDASAMY : இந்த ஆலை எப்போது துவங்கும், விவசாயிகளிடமிருந்து இதற்கான விண்ணப்பங்கள் வாங்கப்படுகிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மிஷினரிக்கு ஆர்டர் கொடுத்திருக்கிறார்கள். இன்னும் ஷேர்-காப்பிட்டல் வசூல் செய்யவேண்டும். இந்த வேலைகள் எல்லாம் இருக்கின்றன. நர்சரி பிளான்டேஷன் பற்றி என்னிடம் தகவல் இல்லை.

SRI S. RAMALINGA PADAYACHI : இந்த ஆலை கட்டுவதில், சில நிலச் சொந்தக்காரர்கள், தங்களை ஆலையின் பங்குதாரர்களாக சேர்த்துக்கொள்ளாததின் காரணமாக அவர்கள் நிலம் கொடுக்க மறுப்பதாகவும், இதன் காரணமாக பாக்டரி கட்டிட வேலை தடங்கல் ஏற்படுகிறது என்றும் சொல்லப்படுகிறது. இது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அப்படியானால் அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி கனம் அங்கத்தினர் அவர்கள் தனியாக கேள்வி போட்டாலோ அல்லது எனக்கு தனியாக எழுதிக் கேட்டாலோ வேண்டிய விவரங்கள் தெரிவிக்கலாம்.